27th September 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) (i) Yes.

(ii) A statement [a] is placed on the table of the House.

(*b*) (i) Yes.

(ii) A statement [b] is placed on the table of the House.

SRI A. VEDARATHNAM : பள்ளிக்கூட மாணவர்களுக்கெல்லாம் காந்திய இலக்கிய நூல்கள் கிடைக்கச் செய்ய ஒவ்வொரு பள்ளியிலும் உள்ள லைப்ரெரியில் வைக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ? குறிப்பாக, மாணவர்கள் அந்த நூல்களைப் படிக்கச்செய்ய சந்தர்ப்பம் கொடுக்க அரசாங்கம் யோசிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது உயர்நிலைப் பள்ளிகள் கல்லூரிகள் இவற்றிலுள்ள லைப்ரெரிகளில் காந்தியவர்களின் நூல்களை வைக்க சர்க்காரே வாங்கிக் கொடுக்க உத்திரவு ஆகியிருக்கிறது. புத்தகத்தை வாங்கி வைக்கலாம், ஆனால் மாணவர்களை அவற்றைப் படிக்கும்படி செய்ய, நிர்பந்தம் செய்ய வழியில்லை.

SRI V. SUBBIAH : காந்திஜீயின் ஜீவிய சரித்திரமான சத்திய சோதனையையும், கீதைபற்றிய அனாசக்தி யோகத்தையும், பாட புத்தகங்களாக வைக்க சர்க்காருக்கு யோசனை உண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பாட புத்தகமாக வைப்பது பற்றி, ஒரு கமிட்டி ஏற்பாடு செய்திருக்கிறேன். அந்தக்கமிட்டி பார்த்து முடிவு செய்ய வேண்டும்.

SRI A. GOVINDASAMY : காந்திஜியின் நூல்கள், காந்திய முறைப்படி கையால் செய்யப்பட்ட காகிதத்தில் அச்சடிக்கப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது குறிப்பிடப்பட்ட புத்தகங்கள் கையால் செய்யப்பட்ட காகிதத்தில் அச்சிடப்பட்டவைதாம்.

*Last religious rites of a patient in a hospital*

* 566 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether any representation has been received by the Government in April 1958 regarding a patient having been denied the opportunity of receiving the last religious rites by the authorities of the Tiruchirappalli Headquarters Hospital, when the patient specifically asked for it;

(*b*) the action taken by Government against the concerned authority ; and

(*c*) the steps taken to avoid such happenings in the future?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) The complaint was found on enquiry to be groundless.

(*c*) Does not arise.

SRI S. LAZAR : ஸார், ஆஸ்பத்திரியில் இருக்கக்கூடியவர்கள் எந்த மதத்தைச் சேர்ந்தவர்களானாலும் அவர்களுக்கு சில பொது உரிமைகள் கொடுக்கப்படவேண்டும். அம்மாதிரி உரிமை மறுக்கப்பட்டதாகப் புகார் சர்க்காருக்குவந்தும், சர்க்கார் அதன்மேல் என்ன நடவடிக்கை எடுத்தார்கள்?

---

[a] & [b] Printed as Appendix III on pages 873–879 infra.

[27th September 1958

THE HON. SRI M. A. MANICKAVELU : புகாரைப்பற்றித் தான், அது ஆதாரமில்லாதது என்று சொன்னேன். அன்றையதினம் அந்த ஆஸ்பத்திரியில் இறந்தவர் ஒருத்தர், அவர் கிறிஸ்தவர் அல்ல. பேஷண்டுகளுக்கு ஸ்பிரிசுவல் கான்ஸொலேஷனுக்கு, முன்னதாகச் சொன்ேல், ஆர்.எம்.ஓ. அவர்கள் ஏற்பாடு செய்வார்கள்.

*Bridges on Cuddalore-Chittoor Road*

* 567 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கடலூரிலிருந்து சித்தூர் செல்லும் ரோடில் 100-வது மைலில் படவேடு ஆற்றின் குறுக்கேயும், கன்னமங்கலம் அருகே 106-வது மைலில் ஒரு பாலமும் கட்ட எவ்வளவு தொகை அனுமதிக்கப்பட்டது ?

(ஆ) அவைகளின் வேலைகள் ஆரம்பிக்கப்பட்டாகிவிட்டனவா ?

THE HON. SRI P. KAKKAN : (a) Rs. 3,60,000 for the bridge across the Padavedu river and Rs. 2,91,600 for the bridge near Kannamangalam.

(b) Investigation of the works is over and detailed estimate for the first bridge and revised estimate for the second bridge are under preparation. Actual execution will be commenced immediately after the estimates are technically sanctioned and preliminaries such as inviting tenders, execution of agreements, etc., are attended to.

SRI S. M. ANNAMALAI : ஸாங்ஷன் ஆகி இரண்டு ஆண்டுகள் ஆகியும், வேலை துவக்காமல் ஏன் தாமதமாகின்றது ?

THE HON. SRI P. KAKKAN : ஒரு பாலம் கட்டுவது என்ருல், அதை நன்ருகப் பார்த்துச் செய்ய வேண்டும் ; பிற்பாடு குறைகள் வரக் கூடாது அல்லவா ?

*Pernambattu Panchayat*

* 568 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ஸ்தல-ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வடஆற்காடு ஜில்லா, பெர்ணம்பேட்டு பஞ்சாயத்து போர்டு கணக்கை ஆடிட் செய்து எத்தனை வருடங்களாகிறது ?

(ஆ) அதற்கு காரணம் என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (a) & (b) The audit of the accounts of the Pernambut Panchayat from 1st November 1953 to 31st March 1956 could not be done as certain records and registers were not available for audit. The audit of the accounts of the panchayat for 1956–57 was however completed, and the audit report was issued in July 1958.

SRI V. K. KOTHANDARAMAN : பெர்ணம்பட்டு பஞ்சாயத்து கணக்குகளை சரிபார்க்காததால் ஊழல் ஏற்பட்டது. அந்தக் காரணத்திற்காக கணக்கு புத்தகங்கள் கோர்ட்டிலே இருந்தன. இப்பொழுது இம் மாதிரி, ஆடிட் இல்லாமல் இருந்துகொண்டேயிருந்தால், மேலும் மேலும் ஊழல்கள் ஏற்பட ஏதுவாகும் என்ற காரணத்திஞல், வருடா வருடம் அந்தக் கணக்குகளை ஆடிட் செய்ய சர்க்கார் முயற்சி செய்யுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : ரெஜிஸ்தர் முதலியவை கோர்ட்டிலிருந்ததால் கணக்குகள் ஆடிட் செய்யப்படவில்லை. இப்பொழுது அவை திரும்பி வந்துவிட்டதால், இந்த வருடத்தில் ஜூலை 1958-ல் ஆடிட் செய்யப்பட்டிருக்கிறது.